உ

சிவமயம்,

சித்தர்களில்சிரேஷ்டராகிய

# மச்சமுனிநாயனர்

அருளிச்செய்தவைப்பு-௮00.

இஃது,

திருவெண்காடு

## ஆறுமுகசுவாமிகளால்

பார்வையிடப்பட்டு,

திருவொற்றியூர்

இருசப்பமுதலியார்-குமாரர்

## பரசுராமமுதலியாரது

பாப்பிரமமுத்திராக்ஷர சாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.



௧௮௮௩௵.

உ

ஸ்ரீசற்குருவேநம:

# மச்சமுனிநாயனார்

அருளிச்செய்த

# திருமந்திரம் - அ00.

காப்பு.

ஆதிபராபரந்தாய்மலரடி
நீதியில்வேதநிற்மயமானது
சோதியில்நாதந் துலங்குஞ்சுடரொளி
சாதியில்நந்தி தன்பதங்காப்பே (க)

காப்பானநந்திகருணைபராபரங், கூப்பானகுண்டலிகுகையிலடங்கி
ன்,தாப்பானபிரமன்தன்னுடைதன்பதம், வாய்ப்பாயென்னெஞ்சில்மகிழ்ந்
துகொண்டேனே உ

கொண்டேனேமாலுங்குடியாகநெஞ்சினில்,கண்டேன்மலர்பதங்கரு
த்தாய்மனந்தனில்,சென்றேனடுவனில்சித்தமகிழ்ந்திட,நின்றேன்துருவம்
சோதிலேசித்தமே ௩

சித்தம்பெருகிசிவமானருத்திரன், பத்தந்தாகப்பதிவாயென்னெஞ்
சினில், சுத்தமாய்நின்றுதுருவத்திடையினில், நித்தியங்கண்டுநின்றேன
திவ்ஞன் ச

அறிவாமயேச்சரமதிச்சுடரொளி,நெறியாகவந்தநேர்மையிலென்மன
ங் குறியாகச்சென்றுகூடிக்கசிந்துநல்,பிரியாதவாசிப்பேரின்பசித்தியே ( )

சித்திக்குமந்தசிவமதொன்றுசிவம், முத்திக்குநல்லமோட்சபீடந்தன்று
பத்திப்பிடித்துப்பரமாம்வெளியிலே, சுத்தமதானசுடரொளிதீபமே ௬

தீபமதாகச்சிவாநந்தபூரணந், சாபந்தவிர்த்துத்தனையறிமந்திரம், தூ
பமதாகிதுலங்குமின்றவாசியில், நீபேதமாகநிலையறிபோதமே ௭

போதமதான்பூரணவாசியில், நாதம்நிறைந்துநன்மலர்பூத்துச், சூதம
தாகித்துலங்கும்பராசத்தி, நீதம்வளர்த்துநின்னருள்கண்டிடே ௮

கண்டதுவந்தக்கருணைக்கடைக்கண், நின்றதுமேலே நிலையறிபூரண
ங், கொண்டிடவந்தக்குறியினில்தீபம், உண்டுநீபார்த்துவுயிரறிவாசியே ௯

வாசியுடனேசித்திநிறைகண்செவி, தேய்வுடன்பரிசந்தெய்வநிலையிது
தோய்வாக்கண்டுதுலங்கியஐம்புலன், சேயுட்சிவமதில்சென்றிடமுத்தியே. ௰

முத்திவளர்ந்ததுமும்மலச்சத்தியில், பத்திநல்மனதாய்ப்பரிபூரண
மாய், சித்தம்பெருகிசிவசத்திரெண்டையும், அத்தனருளாலறிந்துநீபார்த்தி
டே ௰௧

பார்த்திடக்காயம்பரமவெளியிதில், காத்திடப்போகக்கமலமலரின
ல், சேர்த்திடும்வாசிதீபச்சுடரினில், நீத்திடுந்தேகம்நிர்மலமாகுமே ௰௨

நிர்மலமாகிநேர்புருவமையும், நன்மலரானநாதமேஞானமணி, தன்மன
தென்றுதானதுவாகி, உன்மனதாலேயூரறிவீரே ௰௩

அறிவானபோதம்அருளானதீபம், நெறியானவாசிநேர்மூலவன்னி, கு
றியானநாதங்குருவானபோதம், பரியானதேசிப்பதிவானமூலமே ௰௪

மூலமதானமுத்திநடுவணை, ஞாலமதாகிநடுநிலைப்பத்தி, சூலமதாளசு
டரதில்சென்று, சீலமதாகிசிவமதிக்கொள்ளே ௰௫

சிவமானஅகாரந்திருவானபூரணந், தவமாய்மனதில் தாலூருக்கொண்
டால், அவமானதேகமழியாச்சிவமாம், நவமாங்கிரகம்நவம்பெறமுத்தியே.

முத்திஉகாரமுத்தானசத்தியாம்,பத்தியிதெனவேபதிவாய் மனதினி
ல்,சத்தியுமாகத்தானுருக்கொண்டால்,சித்தம்பெருகிசிவனுருவாமே ௰௭

ஆம்சிவசத்திஅருணனுபோதம், நாமயம்நீக்கி நலம்பெறப்பூசிக்கில்
வாமம்பெருகிமதிவலஞ்சென்று,தாம்சிவமல்லால்தனிச்சிவமில்லையே ௰௮

இல்லையேகள்ளம்எகவிருதயந், தொல்லைகளோடிச்சுழலுஞ்சுழிதனில்,
அல்லைகளில்லைத்தானவனுகுந், தில்லையில்வாழுந்திருநடமாமே ௰௯

திருநடமானசிவமானசோதியை, குருவிடமாகக்குறிபினிற்கண்டு,உ
ருவிடமென்றுவுண்மையதாக,மருவிடவாசமயங்காதவாசமே ௨௰

வாசமனோன்மணிமயங்காதபூரணி,நேசமதாகநின்னருள்கண்டு,பாசு
மதாகிப்பதியினிற்செலுத்தி,தேசமதெங்குஞ்செலுத்திடுதிரமே ௨௧

திரமானதீட்சைசெப்புவேன்கேளு, காமானநெல்லிக்கனியதுபோல
சுரமானவாசிசங்கரகெவுரி,வரமானதீட்சைமகிழ்ந்திடக்கேளே ௨௨

கேளுஅம்மென்றுகெடியாகமண்டலம், நாளுடன்செபிக்கில்நமனது
விலகுஞ்,சேலுடன்தேகந்திரமதுவாகும் ,மாலுடன்சித்தரும்வந்திடுந்தானே

தானதுரெண்டாந்தீட்சையைக்கேளு,ஆனதுஉம்மென்றன்புடனீயும்
வானதுநோக்கிமண்டலஞ்செபித்தால், கோனவனருள்தான் குடியிருப்பா
மே ௨௪

குடியினில்மூன்றாந்தீட்சையைக்கேளு,முடியினில்சென்றுமூழுமன
தாக, அடியினில்சிம்மென்றன்புடனீயும்,வடிவுடனன்றாய் வணங்கிடுமுத்
தியே ௨௫

முத்தியில்நாலாந்தீட்சையைக்கேளு,அத்தனருளையன்புடநோக்கி,உ
த்தமநம்மென்றுரிமையாய்ச்செபிக்கில், சத்தனுசிவமாய்த்தானவனாமே()

தானதுஅஞ்சாந்தீட்சையைக்கேளு, ஆனதுதம்மென்றன்புடனீயும்
வானுடநோக்கிமகிழ்ந்துருக்கொண்டால், ஊனுடன்தேகம்உறுதியுமாமே

உறுதியாமாறாந்தீட்சையைக்கேளு, நெறிதவறாமல்நேர்மையில்நின்
று,சுருதியிலங்கென்னுடாந்துருக்கொண்டால்,பருநிபோல்தேசம்பக்குவ
மாமே ௨௮

பக்குவமேழாந்தீட்சையைக்கேளு, திக்கும்பொருளாய்த்தானேசம்மென்று,சிக்குமிடந்தன்னிற்சென்றுருசெபித்தால், திக்குவிசையுஞ்செய்ய லுமாமே ௨௯

செய்யவேஎட்டாந்தீட்சையைக்கேளு, பையவேபிரமபதியிடமாகிக், கையுறுநெல்லிக்கனியதுபோல, வையகந்தன்னிற்கஞ்மெனவில்லே நம ௩௰

நில்லேனிலேயிற்நிலைவுடநின்றால், தொல்லேகளாகவுஞ்சோதிகள்காணுந், தில்லேயில்வாழுந்தெரிசனங்காணும்,நல்லதுஎட்டுசித்துகள்நன்மையே ()

நன்மையாமொன்பதாந்தீட்சையைக்கேளு, உன்மையும்மௌனமேயுகந்துருக்கொண்டால்,சின்மயமானதெரிசனங்காணும், தன்மையிதனவேசார்ந்திடமுத்தியே ௩௨

சார்ந்திடப்பத்தாந்தீட்சையைக்கேளு,கூர்ந்திடமந்தக் குறியைநீபார்த்து, ஆர்ந்திடமும்மென்றனுதினம்நோக்கில், தீர்ந்திடும்பிறவித்திருவுருவாமே ௩௩

ஆமேயுருவமதிநடுஎண்டந், தாமேபிடதிவெளிச்சிவமாகும், ஊமையுருவாயுகந்திடும்பிடதிக்,காமம்விளையுங்கதிரவன்முனையே ௩௪

முனையாநடுமனைமுதண்டமானது, நனையாச்சுடரதில் நாதம்பிறந்திடம்,மனையாநடுமதிஅண்டச்சுடரிலே,அணையாகநின்றது ஆதிமந்தமே ()

ஆதியுமந்தமும்அமர்ந்தபிண்டமாய்,வீதிகளாறாய் விளங்கும்...னசோதிகள்நிறைந்துதூண்டாச்சுடரொளி, சாதிகள்தொண்ணூற் றாறாய்ச மைந்தவே ௩௬

சமைந்தது தன்னைச்சாற்றுவேன்கேளு,அமைந்திடும்போதி லதுசெய்புநன்மை,சுமந்திடுமாதர்சுழலவையாமனில், நிமிந்திடும்பொழுதில்நின்னருள்கண்டிடே ௩௭

கண்டிடுதேகங்காரணமாக,அண்டிடும்போதி லமர்ந்திடும்வாழ்க்கை, சென்றிடுஞ்சிசுவுஞ்சிவரூபமாகி,மன்றிறதென்றமருத்துவந்தானே ௩௮

மருத்துவமென்னைவழுத்திடக்கேளு, அகத்திலறிவு அமைந்திடும்போதல்,வகுத்திடும்பதியும்வளர்பசுபாசமுந், தொகுத்திடும்போதந்தத் தொழில்செய்குவாரே ௩௯

வார்பொருளறிவுவளர்பதிச்சேரில், சீர்சிவயோக சிவபதிசேர்வான், நேர்பதியானநிரணயங்கான,கூர்பதிவானகுணமதுவாமே ௪௰

ஆமேமோனவறிவுகந்தாலது, நாமெனக்கோபம் நவின்றிடுமக்காள், தாமெனக்கொடுமைக்குணத்தினிலேவான், ஊமையுமோடியொளிந்திடும்பாரே ௪௧

ஒளிந்திடும்பாசத்துள்ளறிவுகண்டால், ஒளிர்ந்திடும் அறிவுநேரறியாமல்
களித்திடுமெய்யுலகசூழ்பூதனிலே, களித்திடுஞ்சிவமுங்காரணம்பாரே ௪௨

காணமெசக்கர்முறைதேசம், நீறணிச்சடையோனிறைமதியாலே,
சேணிதேகஞ்செயலதுகண்டர், பேரணிமூன்றின் பெருமைசொல்வேனே ௪௩

பெருமைசிறந்திடும்போஞ்செழுத்தின், உருமையின்பாகத்துண்மை
யைக்கேளு, சிறுமையும்வருமையுஞ்சென்றிடுமந்த, அருமைவளம்பதியாம்
பதிபாசமே ௪௪

பாசஞ்சிறந்தபதியுடன்மூன்றையும், வாசமதாக வழுத்துவோங்கே
ளு, நேசமாம்பதியும்நின்னருள்சிவமாந், தேசமாம்பசுவுஞ்சிவனுமாமே ௪௫

ஆமெனப்பாசமடங்கியதேகமாம், தாமெனவளர்ந்த சமர்த்தைநீகே
ளு, சோமனைதரித்தசுந்தரன்கிருபையால், நாமவணனன்மைசொல்வேனே ௪௬

சொல்லுவேனந்தச்சோதியாம்பதியும், நல்லுறவாகநயம்படநின்று, உ
ள்ளும்புறமுமொடுங்கும்பசுபாசத், தெள்ளிமைகண்டு தெரிவது வுண்மை
யே ௪௭

உண்மையாம்பசுவும்பாசமிரண்டும், நன்மையதாக நாடும்பதியினை,
தன்மைப்பசுவும்பாசந்தனைக்காணும், வண்மையாம்பாசம்பசுவினையறியா
தே ௪௮

அறியாமல்பாசமறியவேவேண்டில், நெறியானஆசான் நேர்மைக்கண்
டுடுவ், குறியாயவர்பதங்குணமுடன்வேண்டில், பரியானபாசம்பசுதனையறி
யுமே ௪௯

ஆமென்பபாசம்பசுதனையறியில், தாமென்பசுவுந்தலைவனைகாணு
ம், நாமெனத்தலைவனைநாடியேகாணில், ஓமெனசித்துகளொருகோடிசித்தி
யே ௫௰

சித்திகளானதேகமுமிரைப், பத்தியேகாணப்பதவிகள்கண்டால், மு
த்தியுமில்லைமோட்சமுமில்லை, சத்தியுமில்லைத்தண்மையுமில்லையே ௫௧

தன்மயமானதருவஞ்செழுத்தின், உண்மைகள்தன்னையுரைக்கிறேன்
கேளு, நன்மைஅகாரம்நடுவெனத்தோன்றி, உண்மைஉகாரம்நிலைத்திடுமண்
டமே ௫௨

அண்டத்தில்விந்துஅதிலோங்காரமாய்க், கண்டத்தில்நின்றகருணைய
ளிந்திவர், பிண்டத்தில்மூன்றும்பெருமையினாலே, நின்றுத்தஅஞ்சும் நே
ரெழுந்தாமே ௫௩

ஆமேஅகாரமமர்ந்திடுஞ்சிவமாந், தாமேஉகாரந்தன்னுயிராகிடும், ஓமேழுங்காரஎழுத்ததுஉடலாம், நாமேவகுத்துநன்முறைத்தோமே ௪௩

உரைத்ததோர்பாதம்உண்மைவெளிப்பட, நிரைத்தகருவில்நிருணையஞ்சொல்வேன், மரைத்ததோர்ரேசகமலரினில்பூரகம், அரைத்ததுகும்பகமமர்ந்ததுகாலே ௪௪

காலானவாறுகருவானமூலம், மேலானவன்னிமெய்யானதீபம், பாலானஅப்புபதிவானபூரணம், சேலானபோதஞ்சிவயோகமாமே ௪௫

## சிவயோகம்.

சிவயோகியாகதீபச்சுடரொளித், தவமாயிருந்து தன்னிலைகண்டால், நவமானசிகாரம்நடுவானவீடு, அவமானமில்லாஅனுக்கிரகம்பாரே ௪௬

பாரேநீவாசிகைப் பஞ்சாட்சரநிலைக், காரேஅந்நிலையைக் கடைக்கண்ணுனிலையினால், சேரேபிரமஞ்சிவபதந்தன்னிலே, கூரேவசியனகுண்டலிதன்மையே ௪௭

தன்மையதானசதுரகிரிதனில், உண்மையாய்ச்சென்றுவுசந்தமேல்திட்டினில், நன்மையாமந்நடுவாங்குகைதனில், சின்மயமாமகத்தீசனைக்கண்டேனே ௪௮

கண்டேன்கத்திற்கருணைதரித்திட, விண்டேன்பலந்தனில் வெகுனிக்கெல்லாங், கொண்டேன்குருவுங்குணமாய்மனந்தனில், நின்றதோரெழுத்தும்நினைவுஞ்சொன்னாரே ௫௰

சொன்னார்கருவுஞ்சேர்டசமுழுதாங், கண்ணேதிரான் காரணஞ்சொல்லி, முன்னோர்கள்செய்தமுறைமையுஞ்சொல்லி, வின்ஞானமென்று விதித்துணர்த்தாரே ௫௧

உரைத்தார்வயித்தியம்உண்மையாம்வாதம், நிறைத்தார்வாசியம் நேரோடுஅஞ்சனம், மறைப்புடன்சாக்குளைக்குமுறையும், வரத்துடன்வாலைமவுனஞ்சொன்னாரே ௫௨

சொன்னார்கைப்பாகஞ்சொல்லினிறைபாகம், பண்ணார்கணகனின்பாகமுஞ்சொல்லி, விஞ்ஞானமென்று வேண்டினவரமுங், கண்ணாரச்சொல்லிக்குருமச்சனென்றார் ௫௩

மச்சேந்திரனெமன்பெருனாக்காய், நிச்சயமாதந்நிலைவையறிந்தால், அச்சமகன்றஅருள்பரமுனியே, வைச்சபொருளைமார்க்கமாய்க்கண்டிடே [illegible]

மூக்கிக்கொழுந்துமுனைகொண்டதீபம், யக்கிப்பிடிக்கும்பதியான வாசியை, நித்தமும்நோக்கி நேர்நிலைகண்டால், சித்தம்பெருகிச்சிவனவ னுமே. ௭௭

ஆமேசிவன்ஞானறிவானபூரணந், தாமெனக்கண்டுதன்னருள்பத்தி வாமமாய்நின்றமதியைபறிந்தபின், காமனைவென்றசுதிரவனுமே. ௭௮

கல்லுப்பு.

கதிரவன்முன்னேகாமம்பெருகி, மதிதனைக்கண்டுமலரதுபூத்துப், பதிதனில்வளர்ந்துபாரினிலகாரமாய்த், ததிதனில்போற்றத் தன்மையி ன்சுன்னமே. ௭௯

சுன்னமாய்நின்ற சுரூபதிதான், தன்மையினாலே சதாசிவமானார், நன்மைபெருகினாதமதனில், உண்மையினாலேயுயர்ந்திடும்நீறே. ௮௰

நீறானஅப்புநிலையானவுப்பு, சேரக்கூடிச்சிவமாகநின்று, கூறுகா ண்டுமொன்றாகக்கூடிக், காறானகாரங்கல்லுப்புமாச்சே. ௮௧

முப்பூகுரு

உப்பானகல்லுவுவரானபூர்ணம், அப்பானவிந்துஆதிநிராமயம், செ ய்பாதபோதஞ்சிவநாதவிந்து, முப்பாம்வழலைமுடிதனிற்காணுமே. ௮௨

காணுமேவழலைக்கயிலாசபூரணந், தோணுமேயந்தத் தொடுகுறி போலவே, வீணல்லஅந்தமெய்யானஉப்புவை, ஆணவம்நீக்கியந்துப்புவே ண்டுமே. ௮௩

வேண்டுமோநாதமெய்யானவிந்துவும், தூண்டுகோலானதுடியானக ல்லுப்பு, ஆண்டுகொள்மூன்றுமறைந்திடும்விந்துநீர், வேண்டியரைத்துமெ ய்பாகவட்டிடே. ௮௪

வட்டதுபோலவடிவாயுருச்செய்து, திட்டமாம்ரவியில் செம்மை யாய்க்காய்ந்தபின், வட்டமதோட்டில்வைத்திடும்பத்தெரு, திட்டமாய்நீ திசிவகுருவாமே. ௮௫

குருவானமுப்பூக்கூட்டிமுடித்திட, திருவானமாதுசெய்வது உண் டாம், உருவாம்அருவதுமோடியொடுங்கிடுந், கருவானவைப்புச் சரக்கு சொல்வேனே. ௮௬

சினைவைப்பு.

சொல்லுவேன்சினந்தொடுகுறிபோல, நல்லுறவாமுப்புக்கல்லுப்புரண் டும், அல்லும்பகச்சாருந்தயிர்விட்டுப், பல்லுறவாகப்பாண்டத்தில்மூடே.()

மூடியேசீலேமண்முழுதுமேபூசி, நாடியேஅவின்பதிதனில்தாக்கி,கூடியமண்டலங்குறிப்பாகவைத்து, தேடியெடுக்கச்சீனமுமாச்சே. ௮௯

ஆச்சடாசினமகிருடன்[redacted]ப்பு, நீச்சடாசொல்வோம்நினைவுடன்கேளு, பேச்சடாசினம்வெடியுடன்ரண்டும், பாச்சடாமூலம்பதிவுடன்சேரே

சேர்த்தேபிடித்துச்சிதம்பரம்பூட்டி, பார்த்தேபிடித்துப் பாண்டமதிட்டுக், காத்தேமண்டலங் கருவாகப்பூமியில், ஆர்த்திநீயெடுக்கஆலாக்கியாமே. ௯௰

ஆமேநல்லுப்புங்கல்லுப்புரண்டும், தாமேபடிகந்தன்னொடுஅண்டம் நாமெனஉழுந்துநல்மணிக்குண்டும், வாமெனமாவாய்வகையுடனிடியே.

வெண்காரம்.

இடித்துடன்பால்வார்த்தியல்புடன்கிண்டித், தொடுத்துடன்பானையில்தோன்றியேமூடிக், கடுத்துடன்மண்டலங்காத்துநீவாங்க,விடுத்தவெண்காரம்விளைவிதுவாமே. ௯௧

சாரம்.

விளைவானசாரம்விபரமதுகேள், தளைவாமதுநீர்தன்னொடுநீறும், வளைவாமுறிமதகரிநீறுங், குளைவாயொன்றாகக்கூட்டிநீசேரே. ௯௨

சேர்ப்பதுவெடியுஞ்சிவமானசுன்னமும்,கோத்திடுகுமுறவெரித்துகாத்திடுமண்டலங்கருவாய்புதைத்தபின்,சார்த்திடுஞ்சாரக்குச்சாரமதாமே

துருசு.

சாரமாந்துருசுகன்னொடுமுறைமைகேள், காரமதானகல்லுப்புத்தன்னீரை, வீரமாமூலவிசையுடன்சேர்த்துப், பாரமாந்தயிரும்பழமுடனீரே

நீருடனுப்புநிலையுடன்கூடிப்,பாருடன்செப்புப்பாத்திரந்தன்னிலே, நீருடன்சேர்த்துநினைவுடன் மண்டலம், வாருடனெடுக்க வகையுடன் துருசே. ௯௪

துருசுபாஷாணம்.

துரிசுபாஷாணஞ்சொல்வதுகேளு, பரிசுடன்வெடியும்பச்சையுஞ்சீனமும், நெறியுடன்சரியாய்நேர்ந்ததுருதங், குறியுடனொன்றாய்க்கூட்டிநீசேரே ௯௫

சேர்த்துப்பொடித்துத்திமிரக்கருவிடு, பார்த்துநீபன்றிநெய்யதுகூட்டி, வார்த்துப்பிசைந்துவட்டடைகைதனிலிடு, யாத்துருவட்டகைபயங்காதேபூமே ௯௬

பூரத்திறைலேபொடியுமுடியும், வாறேப்பாய்செய்துவைத்திமொழுந்தில, சேரொப்பாய்மூடிநேருடனெடுத்திட, பாரோத்தகட்டிபாஷாணமாமே. ௬௯௯

கெவுரி.

ஆமேகெவுரியதினிடமுறைமைகேள், தாமேவெடியுந்தன்னொடுநாகமும், வாமெனச்சூதமும்வகையுடன்தாரமும், சாமேபொடித்துத்தான்பண்ணுகெய்யே. ௱

கெய்யுடன்மஞ்சள்கருவுடன்கிண்ணியில், ஐயவேவைத்துப் பதிவாகமூடி, துய்யவேதியிற்சுழலவெரித்திட, அய்யனேமஞ்சல்கெவுரியாங்காணே. ௱௧

வீரம்.

காணவேவீரங்கருவுடன்சொல்லுவேன், சினமும்வெடியுஞ்சிறந்தசாரமும், பேணவேகல்லுப்பும்பெலமானஇந்துப்பும், தோணவேதுருசுந்தொகைசரிகூட்டிடே. ௱௨

கூட்டிச்சரிசிடைக்குருவாம்ரசமதை, மாட்டிப்பொடித்துமறவாயதையெடு, நாட்டியேகாசிக்குப்பிநடுவினில், ஊட்டிமேற்சீலையொன்பதுசெய்திடே ௱௩

செய்திடுபாண்டத்தியல்பாய்மணலிட்டு, கொய்திடுகுப்பிகைக்குள்ளமைத்ததின்மேல், மொய்திடுமணலைமூக்களவாயிடு, எய்திடுஅனலையெரித்திடுசாமமே ௱௪

சாமமெரித்துத்தன்மையாய்க்குளிர்ந்தபின், ஓமெனக்குப்பியை யுடைத்துக்கருவெடு, தாமெனக்கருவில்தனதொடுஆகியும், வாமென்னப்பாரையும்வாளமும்பேதியே. ௱௫

பேதிக்கஒன்றுய்ப்பெருக்கப்பொடித்திடு, வாதிக்கக்குப்பியில்வைத்துமுன்போலெரி, சாதிக்கஆறுசாமமெரித்தபின், ஆதிக்கவீரமசையாதுவீரமே ௱௬

வீரமேசெய்யவேண்டினர்சித்தர்கள், பாரமென்றெண்ணிப்பாடினார்முன்பின்னும், சாரமாய்க்கொங்கணர்சாத்தினார்வீரமும், அருமறியாரவனபாடல்முத்திமே ௱௭

முத்தியாமச்சமுனிபாடலெண்ணூறும், சித்தியாய்ப்பார்த்துத்தேறினன்கொங்கணன், பத்தியுமுத்தியும்பார்த்துப்பதவியில், சித்தம்பெருகிச்சிலம்புகண்டாரே ௱௮

கண்டதெண்ணூற்றுக்கருவானமந்திரம், கொண்டவர்மனதில்குருமொழியாக, விண்டிடப்போகாவிண்ணிடிதான்விழும், சண்டனுக்கிரையாய்த்தான்மாண்டானே ௱௯

மாளுவான்பெண்ணின்மயக்கந்தன்னில், ஆளுவான்முடன்வனுமைய

காக்கோணுங்குடிலமுங்கூறுவான்மூடர்கள், காலநிலைபதியாக்க லைதகல் சொக்காளே. ௱௰

சொல்லுவார்மூடர்தாகளறமாட்டார், நல்லவர்போல்நல்மொழிகூறிக், கொல்லுவாறுயிரைக்கூட்டுத்துவன்போலே, தொல்லைகள்செய்துசுழலுவான்பாரே. ௱௰௧

பார்தன்னுயிர்போல்பண்புடன்பாரார், ஈரமற்றவர்போலிறைச்சிகள் தின்பார், சாரமற்றவர்போல்சாதிப்பான்பூசையில், நேரும்றபூரணம்நிலையறியார்களே. ௱௰௨

நிலையாதிருளில்நின்னருளென்று வலையானமாய்கையில்மயங்கித்தவித்தாக், தொலைபாச்சுழிபைத்துருவமதென்று, கலையுானவாசியைக்கழிப்பாண்கசடனே, ௱௰௩

கசடனுறவைக்காட்டுகிறேன்மைந்தா, நிசமதாய்ப்பிரமநிலைபிதுவென்று, சிசமாஞ்சுழியைக்கிருபையாற்காட்டிச், சிசமாமிதுவெனச்செப்புவாண்பாரே. ௱௰௪

பாரினில்மைந்தாபலபலவிதமாய்க், கூறுடன்சொல்லிக்குலைவலதனிப்பான், நேருடன்நிலையும்நிலையிடவழியுஞ், சீருடன்மூலச்செயலறியானே

அறிவானபருவமதிடுத்தீபம், குறியானவாசிக்குணமதறியான், உருவர்ணகாயத்துணைமைபெருவெளி, திருவானமூலஞ்செயலிதுவாமே. ௱௰௫

செயலிதுவானசித்திரநாடி, நயமுடன்சொல்வேண்டுமுதுக தனில், சுயமுடன்மூலச்சூடாதுதோன்றி, இயல்புடன்பிடரியிலெய்திடும்பாரே. ௱௰௬

பாரேபிடரிபதிவாம்பிடரியில், நேரகத்தீசர்நிலையதுவாகும், சாரதிற்பிரமந்தன்னொளிவாகும், பாரதில்நீயும்பரிபூரணமே. ௱௰௭

பூரணமாம்பரிபூரணந்தன்னை, கார்புருவமையங்கருணைப்பெருவெளி, பார்குருநாதன்பரவெளியதனில், சாரதில்தீபந்தன்னொளிகாணே. ௱௰௮

Vide 41 to 48 லிங்கவைப்பு போகர் 700 Page 2.01

நாணலிங்கத்தன்மையைக்கேளு, கோணுனகுதம்குருவங்கம்ரண்டும், ஊகவொன்றுயுடன்சேரதில்குரு, தேனுனசினஞ் சேரதிற்பாதியே

பாதியைச்சேர்த்துப்பதிவாய்ப்பொடிசெய்து, ஆதியாங்குப்பியிலதிலிட்டெரித்திட்டு, நீதியாய்ச்சாமம்நினைவாயெரித்திடச், சோதிலிங்கஞ்சுத்தமாமே. ௱௨௧

அந்தரமாகித்துலங்குமெனைனூறும், மந்திரந்தன்னைமகத்தானகோ ங்கனர், தந்திரமாகத்தன்மனம்நோக்கி, அந்தரந்தன்னிலாதிகண்டானே.

ஆதிசரக்குமதுபத்தினாலும், வாதிகள்மெச்சவைத்தனர்கொங்கனா ர், நீதிகளோடேநினைவையறிந்தால், சோதித்துருவங் துலங்குவதறிவே.

சிங்கிவைப்பு.

துலங்கியசிங்கிதுலக்குவேன்கேளு, நிலங்கருநாகம் நீர்வெடியுப்பு, இலங்குரசிதமுஞ்சீனமுங்கூட்டி, பலங்கருவாகப்பதியுடன்பொடியே. ()

பொடிதனைக்குகையில்பொருந்தவேயிட்டு, அடிகனில்தானையிட்டுதி ன்கீழ்க்குகைவைத்துத், திடமுடன்புடமதில்சென்றதுவுருகி, வடித்திடும்ப டியில்குகையினில்தானே. ௱௨௫

தானதுஎடுத்துத்தன்மையாய்ப்பார்த்தால், நேனதிநிறமாய்ச்சிங்கி யுமாகும், ஆனதோர்சிங்கிஆதிசரக்கது, கோனவனருளால் குருமுறைபாரே

பூரவைப்பு.

முறையானபூரமுடிக்கும்வகைகேள், நிறையானபூரம்நேர்வெடிசின ம், கறையானகாரமுங்கணக்குச்சரியாய்த், துறையாகக்கூட்டித்தோணவ ரைத்திடே. ௱௨௭

அரைத்திடுசந்தனக்கியாழந்தன்னிலே, கரைத்திடுகூழ்போற்கலசந்த னிலிட்டு, நிரைத்தவால்மிளகுப்பொடியதிற்சேர்த்து, திரத்துடன்பூமியி ற்சேருமண்டலமே ௱௨௮

மண்டலஞ்சென்றுவகையுடனெடுத்தால், கொண்டிடுபூரங்குருவாக நிற்கும், அண்டர்கள்மெச்சுமாதிசரக்கிது, தொண்டர்கள்செய்யும் துறை யிதுவாமே. ௱௨௯

சாம்பிராணி வைப்பு.

ஆமேசாம்பிராணியதினிடமுறைமைகேள், தாமேகுங்கிலியந் தன் னோடொக்கும், வாமெனக்கறுவாப்பஞ்சையுங்கூட்டி, நாமெனஇடித்து ந ன்றாய்ப்பொடித்திடே. ௱௩௰

பொடிதனையெடுத்துப்போட்டிடும்பானையில், அடியுடனெய்யில்மாத் திப்பிசைந்திடு, வடிவுடனடுப்பில்வைத்துஎடுத்திடு, படியுடனுருகும்புதந் தன்னைப்பார்த்திடே. ௱௩௧

பார்த்திருந்தானபதிவாயருகிடில், மாத்திடும்பாயில்வளம்பெறக்கண்டி டும், சேர்த்திடுங்கட்டிபெலமாயிருகிடும், சார்த்திடும்பேரு சாம்பிராணி தானே. ௱௩௨

## நாகவைப்பு.

காரென்றநாகந்தன்னைமயக்கேளு, காரென்றவெள்ளிக்காரீயங்குந்தம், கோரென்றமூன்றுங்குணமாயிருக்கிறீ, பாரென்றகல்வம் பதமாய்ப் பொடித்திடே. ௱௩௩

பொடித்திடுமருந்துபோடும்விதங்கேள், சுடுத்திடும் வெடியுந்தாளகங் கெந்தியும், அடித்துடன்பொடித்துஅமைத்திடுகுகையினில், நொடித்திட அடுப்பில்ஜோக்கியெரித்திடே ௱௩௪

எரிக்கிடும்போதினிதமாயிருக்கிடும், குறிக்குவுருகுங்குழம்பதுசன்னாவரிந்திடுமச்சில்வார்த்திடுகண்விழும், தரித்திரபேதந்தன்னுக்கஞ்சிக் கிடயே. ௱௩௫

சித்திக்குமந்தசெயமாமென்னூறாம், முத்திக்குநல்லமோட்சமதாமே, புத்திக்குனின்றபொருளதுநான்றாகு, சத்தியமாகத் தன்னருள்கடே. ௱௩௬

காப்பதுமென்னூர்கண்மணிபோலே, பார்ப்பதுபதனம்பதனமதாகச், சேர்ப்பதுகுகையிற்றிறமுடன்வைத்துக், கூர்ப்புடனீயுங்குருவெனக்காரே. ௱௩௭

காருஇந்நூலைக்கசடறுக்கியார், நேரெனப்பார்த்து நிலையறிவார்க்கியாவரெனிலுமமர்ந்துநீபேசு, சார்வதுபிடரித்தன்சுழிமுனையே. ௱௩௮

முனையினில்தீபமுச்சுடராகும், மனைதனைக்கண்டுமகிழ்ந்துநீபாரு, சுகனையினில்நின்றதுருவத்திலேற்றி, அணைதனின்னிறுஅருளதுகாரே. ௱௩௯

## கார்வங்கம்.

கார்வங்நாசிநங்கருத்துடன்கேளு, வெள்வங்காரமும் வெடியுடன்தாளகங், கெருடனொன்றாய்ப்பிசிர்த்துப்பொடிசேர்த்து, பாரக்குகையில்பதித்து எரித்திடே ௱௪௰

எரித்திடும்போதில்நாகமிறுகிடும், பரித்திடுவங்கசிதமென்றும், குறித்திடுஞ்சித்தர்கூட்டுவகையிது, விரித்தபொருளின்விபரமிதாமே ௱௪௧

தாமெனவெள்ளிரசிதமிதுகேள், நாமெனவின்றநல்வெள்ளிரசமும், ஓமெனக்கெந்திபெரிளிர்வங்கந்தாளகம், ஆமெனக்கூட்டியமிழ்த்துப் பொடித்திடே. ௱௪௨

பொடிதனைக்குகையிற்போதவாயிடு, அடிதனில்தீயைஅழித்தி வெரித்திடப், படிதனிலுருக்கிப்பக்குவமாகும், திடமுடனுறிச் செம்மையதாமே ௱௪௩

## ரசிதம்.

ஆமெனவெள்ளியாக்கிடும்ரசிதம், காமெனக்கனகக்கன்னியேனு
லும், ஏமெனுநிலையும் பெரி லபார்த்தால்; ஓமெனவந்தவுண்மையிதாமே

## இங்கு காயம்.

உண்மையாயிங்குவுரைக்கிறேன்கேளு, நன்மையாயுள்ளிங்கமுடன்
கடுகுஞ்,செம்மையாய்க்கூட்டிச்சேர்த்தரைமைபோல், உண்மையாய்வெய்
யிலிலுலரவைத்திடே ௱௪௫

உலர்ந்திடும்வேப்பம்பட்டைத்தயிலம்,கலந்திகழாகநயமாயெடுத்திடு
செலந்தனிற்சாரக்கைச்சேர்த்துப்பிசைந்திடு,குலந்தனிலாதி கூட்டியுருட்
டிடே ௱௪௬

உருட்டிபேயிங்கான்தாழியில்சேர்த்திடு,இருட்டினில்மண்டலமிருந்
தியெடுத்திடக்,கருத்துடனசைந்துகாரணமாகித், திருத்தமாய்க்காயஞ்
செம்மையாய்வீசுமே. ௱௪௭

வீசுமேகாயம்வீறுகளேறிக்,கூசுமேநாசிகுமுறவெரித்திடும்வாசிகள்
விரைவாங்கிக்கட்டிடும்,தேசுகளாவதேகவுறுதியே. ௱௪௮

உறுதிகள்சொன்னேமுவமையெண்ணூறும்,செறிவுடன்பார்த்துநே
ர்நிலைபெற்றோர்,கருவுடன்குருவுங்காரணமாகத்,திருவருள்பெற்றசித்தமு
மாமே. ௱௪௯

## தொட்டிவைப்பு.

சித்தாங்தொட்டிசெப்புவேன்கேளு,பெற்றிடும்வங்கம்பேரதூரண்டு
ம்,சுற்றிடுரசமுஞ்சுகமுடன்கூட்டிச், சத்தமுங்கெந்தியுந் தாளகஞ்சேசே

சேர்த்திடுந்துருசஞ்செம்மையாயேழும்,பார்த்தெருநிறையாய்ப்படி
யப்பொடித்திடு, வார்த்திடுகுகையில்வளமாயெரித்திடப்,பார்த்திடத்தொ
ட்டிப்பாஷாணமானதே. ௱௫௧

ஆமெனவெண்ணூறடிமுடிபார்த்தால், தாமெனத்தோன்றுந்தன்மை
வெளிப்படும், வாமெனஅந்தமதியாமமிர்தமும், ஓமெனமூலமொளிதருந்
தீபமே. ௱௫௨

தீபமதானசிவசத்திரூபமுந்,தீபமாய்நின்றதேகமுஞ்சித்தியாம், தீப
த்தில்மூலஞ்சென்றிடவாசியாம்,தீபஞ்சிவமாய்ச்சென்றிடுயோகமே. ௱௫௩

யோகத்துக்காதிஒன்றானவட்சரங், கேகத்துக்காதிசிவசத்திமூலமா
ம்,யோகத்துக்காதியென்னென்றுசொல்லுவேன்,தாகத்துக்காதி கண்ணி
ரதிகமே. ௱௫௪

## வெடியுப்பு.

அதிகசாக்குஆதியிலவணம்,மதியானவக்ஷரம்வடித்தநீர்காய்ச்சி, நிதி
யானசம்பழநீரதைத்தாக்கிடில், விதியாகும்பிவெடியுப்புமாச்சே ௱௫௫

உப்பானபூநீருரைக்கும்வகைகேள், வெப்பாஞ்சவுடுவேளையடிபெடு அப்பினிற்போட்டுஅலையக்கரைத்தனைத், கொப்பயாய்ரவியிற்கூர்மையாய்க் காய்ச்சிடே ௱௫௬

காய்ச்சிடப்பூவுங்கருவானபூநீராம்,மாய்ச்சிடப்பூநீர்வளமாய்ச்சரக்கு க்குப்,பாய்ச்சிடஅநேகப்பதிவாகக்கட்டுணும்,மூச்சிடப்போகாமுனையான நீபொன்னே ௱௫௭

பூநீர்ச்சவுக்காரம்.

தீபசவுக்காரஞ்செப்புவேன்கேளு, மாயாதிபூநீர்வளர்வெடிசாரமும் தோய்வடிநீரிற்சுண்டிடக்காய்ச்சு, வாயுறஎண்ணெய்வடித்துஉருட்டே.()

உருட்டியகாரமேமாஞ்சவுக்காரமாம்,மருட்டிடுஞ்சரக்கைவாட்டியெரி த்திடு, திருட்டுகள்பேசித்திரியுறவாதியை, வெருட்டுமிக்காரம்வேதைகள் கோடியே ௱௫௮

சாரல்வணம்.

கொடியானசாரல்வணமதுகேள்,நெடியானபூநீரும்நேர்கரியுப்பு, படி யளவெதசியில்பதமாயெரித்திட,மடியாதசாரல்வணமிதாமே. ௱௫௯

சத்திசாரம்.

தாமெனச்சத்திசாரமதுகேள், நாமெனநீரில்நல்வெடிசாரமும்,ஆமெ னப்பூவுமதுகரியுப்புடன்,சாமெனக்காய்ச்சச்சத்திநற்சாரமே. ௱௬௧

எவாச்சாரம்.

சாரமாமெவாச்சாரமதுகேள்,காரமாம்வெடியுங்கல்லுப்புநீருடன்,பா ருடன்பூவும்பதமாயமுரியில்,நேருடன்காய்ச்சநிசமெவாச்சாரமே ௱௬௨

காசிச்சாரம்.

நிசமானகாசிச்சாரமதுகேள்,வசமானபூநீர்வளர்வெடிநீருப்பு, திசமா னஎவாச்சாரமுங்கூட்டியே, பசமானதேசியிற்பதமாயெரித்திடே. ௱௬௩

எரிந்திடக்காய்ச்சியிதமானசாரமாங், குறித்தசரக்கைக்குணமாகக்கட் டுண்ணும்,விரித்தசடையன்வேதாந்தசாரத்தைத்தரித்தஎண்ணூறில்தான வறுனதே. ௱௬௪

வகபடிச்சாரம்.

தானானவகச்சாரமதுகேள்,வானும்வெடியும்வளமானகல்லும், கோனு டமுரிக்கொடியநீருப்புடன், தேனானகாசிச்சாரமுஞ்சேர்த்திடே. ௱௬௫

சேர்க்கிடுஆனைச்செலமிது கன்னிலே, பார்த்துக்கரைத்துப்பதமா யெரித்திடப்,பூத்துப்பொலிந்துபொன்றிடேகண்டிடும், வத்திடுஞ்சரக்கு வகைபடிச்சாரமே ௱௬௬

சினலவணம்.

சாரமாம்சீனலவணமதுகேள், வாரமாம்பூநீர்வளர்கல்லுநீருப்பு, காரமாம்வெடிசரிகாடியிலெரித்திட,பாரமாஞ்சினலவணமிதாமே. ௱௬௭

செந்திலவணம்.

காமெனச்செந்திலவணமதுகேள்,ஆமெனவெடியுமதினிடசாரமும், நாமெனவுப்புமநலமானசினமும், வாமெனஅமுரியில்வளமாயெரித்திடே

எரித்திடவுப்புமிறுகிச்சிவந்திடும், தரித்தசோர்செந்திலவணமிதபார்,குறித்தமேதாரிரசமுங்குணமாயிறுகிடு, மரித்தரசமுமகத்தானசித்திடே. ௱௬௯

இந்துப்பு.

சித்திக்கவேண்டியேசெப்புவேனிந்துப்பு, முத்திக்குச்சீனமுமுதலானகல்லுப்பும்,வெற்றிவெடியுடன்மேலானசாரமும்,சுத்தநீருப்புடன்சுகமாகக்கூட்டியே ௱௭௰

கூட்டிடுந்தேகிஆவினீர்தன்னோடு, ஆட்டிக்கரைத்துஅனலிலெரித்திட, நீட்டியெரித்துநிலைவாயிறக்கையில், நாட்டியேபூநீர்நலமாயரையிடே

அரையிட்டுமூடியனலில்வெதுப்பிட,இரையிட்டவாயுவையிறக்குமிந்துப்பாகும்,துறையிட்டநோயைத்தூரத்துமொடுக்கிடும், நிறையிட்டமாதுநிர்ணயமாகுமே ௱௭௨

சிந்துலவணம்.

ஆகுமேசிந்துஅதிகலவணம்,வாகுடன்சொல்வோமகிழ்ந்துநீகேளு, பாகுடன்சாரம்படிகமாஞ்சீனம்,தாகமாம்வெடியுந்தனிப்பூவழலையோரெங்கு

வழலையோடொன்றாய்வாகுடன்கூட்டி, நிழலக்கண்டஞ்சுநீரதிற்கரைத்து,சுழல்படமக்கண்டயெரித்திட, சிலையொத்துச்சிந்துலவணமிதாமே. ௱௭௪

அட்டுப்பு.

ஆமேயட்டுப்புஅன்புடன்சொல்வோம்,தாமெனப்பூநீர்தனிவெடிசீனம்,நாமெனச்சாரம்நலமானஇந்தும், காமன்தன்னீரிற்கரைத்தெரித்திடே.

௩

எரித்திடும்போதுஇயல்பதங்கண்டு,குறித்தநற்சட்டியிற் குணமாயி றக்கிச்,சரிந்துடனுறிச்சுழன்றதுகட்டியாம், அரித்துடனுப்புஅட்டுப்பு மாமே. ॥௭௬

## கல்லுப்பு.

ஆமேகல்லுப்புஅன்புடன்சொல்வோம்,தாமேநீருப்புத் தன்னுடுசா ரமும்,நாமேவெடியும்கலமானபூநீரும், வாமமாந்தேசியில் மயங்கவெரித் திடே. ॥௭௭

மயங்கவெரித்துவளமாகச்சுற்றினல், தயங்கியேயுப்புத்தானங்கேக ட்டிடுஞ்,செயங்கொண்டவுப்புத்திறமானகல்லுப்பு, நயங்கொண்டுபார்த் தால்நாட்டங்கள்காணுமே. ॥௭௮

## கூடனுப்பு.

நாட்டமாஞ்கூடனலமானவுப்புகேள்,தாட்டியமாம்வெடிதன்னுடுசீ னமும்,காட்டியசாரங்கடியகல்லுப்புடன்,ஆட்டியபூநீரதினிடைகூட்டிடே

கூட்டிப்பொடித்துக்குருவானவாளநீர்,நாட்டிக்கரைத்துநலமாயெரி த்திட,பூட்டியவுப்புப்புதுமையாய்க்கட்டியே, குட்டியெடுக்கக்கூடனுப் பானதே ॥௮௰

## சவுட்டுப்பு.

உப்பானசவுட்டுப்புவுறவாமுறைகேள், அப்பானபூநீரதிலிந்துகாரமு ம், வெப்பாம்வெடியும்வெண்சீனசாரமும், செப்பமுடனே தேசியினீரி டே ॥௮௧

தேசியினீரிற்சிவக்கக்கரைத்துப்பின், மாசதில்லாமல்வைத்தெரித் திட,நேசமாய்வற்றிநின்றதோருப்பது, வாசம்நிறைந்த வெள்சவுட்டுப் பிதே. ॥௮௨

## உப்புக்கட்டு.

உப்பில்கட்டுப்புவுகந்துநான்சொல்வேன், தெப்புங்கறியுப்புச்சேரும் வெடியுப்பு, கொப்பானசீனங்கொடியநவச்சாரம், அப்பானநீரிலடங்கக்க ரைத்திடே ॥௮௩

கரைத்திட்டடுப்பிற்கனலிட்டெரித்திட, விரைத்ததுவுப்புவெண் மையாய்க்கட்டுன்னும்,நிரைத்திட்டமாகநின்றதோருப்பது, உரைத்திட ப்போகாவுண்மைகட்டுப்பதே ॥௮௪

உண்மையாய்க்காரசாரமுரைத்திட்டோம்,நன்மையாய்ப்பார்த்துநடு நிலைபற்றினல்,உண்மைபெருகியோடுந்துறைக்கெல்லாம்,தண்மையாய்க்கா ரசாரமுறைபிதே ॥௮௫

## வைப்புப்பாஷாணம்.

முறையானவைப்புப்பாஷாணஞ்சொல்லுவேன், நிறையாகக்கண்டுநீ ன்னருள்பெற்றால்,துறையானவைப்புத்துலங்குமெண்ணூறில்,வரையாஞ் சரக்குவைப்புச்சொல்வேனே ॥௮௬

## தொட்டிப்பாஷாணம்.

சொல்லுவேன்தொட்டிப்பாஷாணந்தன்னை, வெள்ளிகாரீயம்லிங்கஞ் சாரைநாகமும், துள்ளியரசமுந்தோய்வாகக்கூட்டியே, தெள்ளியதுருசுஞ் செயசாரங்கூட்டிடே ௱௮௭

கூட்டிப்பொடித்துக்குகைதனிலுருக்கிட, நாட்டியதொட்டிநல்லபாஷாணமாம், பூட்டியபூட்டுப்புதுமைக்குருவாகும், தாட்டிகமானசமர்த்தை யறிந்திடே. ௱௮௮

## செம்புத்தொட்டி.

அறிவானசெம்புத்தொட்டியதைக்கேளு, நெறியானநாகமுங்கோவசங்கமும், குறியானலிங்கமுந்தாளமுங்கூட்டியே, சரியாய்ப்பொடித்துச்சுத்திடுங்குகையிலே ௱௮௯

குகையிலேயெடுத்துக்கூர்மையாய்க்காய்ச்சிட, வகையுடன்சேர்ந்துவளமாயிறுகிடும், தகையுடன்குகையில்தானதுபார்க்கத், தொகையுடன் செம்புத்தொட்டியுமாமே. ௱௯௰

## அயத்தொட்டி.

ஆமேஅயத்தொட்டியன்புடன்சொல்லுவேன், தாமேனவங்கமுந்தன்னேநாகமும், நாமெனச்சூதமும்நல்லதோர்கெந்தியும், ஓமேனலிங்கமுமுடன்தாரங்கூட்டியே ௱௯௧

தாரமுடனேசரக்கைப்பொடித்திட்டுக், காரமாய்க்குகையிற்கட்டியுருக்கிட, சாரமாயுருகித்தன்னிலடங்கிடும், வாரமாமயத்தொட்டியுமாமே.

## புத்துத்தொட்டி.

ஆகுமேபுத்துத்தொட்டியதைக்கேள், நாகம்வெள்வங்கமும்நயமானலிங்கமும், பாகுடன்தாளகம்பதிவாம்வெடியுப்பு, வாகுடன்கூட்டி வகையாய்ப்பொடித்திடே ௱௯௩

பொடித்தபொடியைப்போதுவாங்குகையினில், வடித்தஅனலில்வாகுடனுருகினால், அடுத்துஇறுகியன்புடன்கட்டுமே, தொடுத்ததோர்புத்துத்தொட்டியிதாச்சே ௱௯௪

## செத்தசிங்கி.

ஆச்சென்றுசெத்தசிங்கியைக்கேளு, வாய்ச்சிடுதுருசம்வளமான்கெந்தியும், மூச்செனத்தாரமுடிவானலிங்கம், காச்செனக்காரங்கண்டிடைதூக்கிடே ௱௯௫

தூக்கிப்பொடித்துத்துருவானசெம்பினில், தாக்கியேமூடித்தணலிட்டெரித்திட, பாக்கியம்போலேபதிவாயுருக்கியே, சீக்கிரமாகச்செத்தசிங்கியுமாமே ௱௯௬

சமசிங்கி.

சிங்கிபாமேமசிங்கியைக்கேளு,தங்கியதாரந்தன்னோடேலிங்கம்,பூரணியகெந்திபொலிவானதுருசு,மங்கியகாரநாகம்வளரக்கூட்டிடே ௱௯௭

கூட்டிப்பொடித்துக்குருவாகச்செப்பினில்நாட்டியேமூடிநயமாயெரித்திட,ஆட்டியமருந்துஅடைவாயுருகியே, பூட்டியசமம்பொலிவானசிங்கியே ௱௯௮

ரசிதசிங்கி.

பொலிவாமிரசிதம்பொங்கியசிங்கிகேள்,மலிவானதாரம்வளர்வீரதுத்தமும்,தெளிவாமனோசிலைசிங்கியும்வெள்ளையும்ஒளிவானபூவுமொன்றாய்ப்பொடித்திடே ௱௯௯

ஒன்றாய்ப்பொடித்துஉருவானவெண்கலம், நன்றானசெப்பினில்நயமாகமூடியே,குன்றாததீயிற்குணமாயெரித்திடப், பன்றாமிரசிதசிங்கியைப்பார்த்திடே. ௨௱

பாஷாணம்.

பாருநீஉருகையிற்பாஷாணந்தன்னையே, சீர்பெருஞ்செந்திதிருவாமனோசிலை,கார்பெறுதாரங்கனத்தபாஷாணமும்,ஏர்பெறுந்துருசுவகாந்த்வீரமே. ௨௱௧

வீரத்துடனேவிளங்கியநாகமும், பாருற்றரசமும் பதிவாய்ப்பொடிசெய்து,நேரொத்தகுடவனோரந்தச்சிமிழிலே,சீரொத்துவைத்துச் சிக்கெனமூடியே ௨௱௨

மூடியேமுழத்தில்முக்கியப்புடமிடு,வாடியுருகிவளைமையாய்க்கட்டும்பார்,நாடியெடுக்கநலமணியாகவே, பாடிநீமுறிவிலாப் பாஷாணமாகுமே.

கார்முகில்பாஷாணம்.

ஆதுமேகார்முகிலப்பனேசொல்லுவேன், நாகமும்வீரமும்கல்பாஷாணமும், பாருடன்லிங்கமும்பச்சையுங்கூட்டியே,வாருடன்தாரமும் வரிசையாய்க்கூட்டிடே. ௨௱௪

கூட்டிப்பொடித்துக்குகையாமயச்செப்பில், நாட்டியேமூடிநயமாம்புடந்தனில்,வாட்டியெடுக்கவளமாயுருகியே, ஆட்டியகார்முகிலதிகபாஷாணமே ௨௱௫

பாஷாணலிங்கம்.

பாடாணலிங்கம்பகருவேன்மக்களே, கூசாமல்வீரங்குருவாமனோசிலை,பேசாதலிங்கம்பெரிதானகெந்தகம், ஆசான்துருசுஅதில்ரசம் கூட்டிடே. ௨௱௬

கட்டிப்பொடித்துக்குப்பியிற்காக்கியே, ஆட்டிமண்சீலை யஞ்சலை சாக்கிடு, நீட்டிய தாழியிற்செம்பிமணலிட்டு, மாட்டிடுதீயைவளாசஞ்சாமமே. ௨௱௭

சாமமெரித்துந்தானெடுகுப்பியில், எமநிறம்போலிருக்குநல்லிங்கமும், தாமதமில்லைசதகோடிவேலையாம், காமனைவென்றகருணைக்கண்பார்த்திடே. ௨௱௮

வெள்ளைப்பாஷாணம்

பார்த்திடுவெள்ளைப்பாஷாணந்தன்னையே, நீற்றிடுவெள்ளைநேர்சசாளகஞ், சாற்றிடும்வீரஞ்சநிராட்வெடியுப்பு, ஆற்றிடுமொன்றையரைத்துப்பொடித்திடே ௨௱௯

பொடிதனைக்குப்பியிற்போட்டுமண்சீலைசெய், வடிவுள்ளதாழியில் வைத்துமணலிடு, சடுதியிற்றீயைத்தாககிலைற்சாமமும், முடிவாகக்காய்ந்தால்முத்துபோற்கட்டுமே. ௨௱௰

கட்டிபிறுகிக்கனத்தபாஷாணமும், திட்டமாய்க்குப்பியிற்சேர்ந்து இறுகிடும், வட்டமதியெனவளர்கயிலாசமும், கிட்டநின்றேயதிற்கிருபையாமதியே. ௨௱௰௧

ஆதியாம்வெள்ளைபறிந்தவன்சித்தனும், சோதியில்நாதந்தானிங்குமணிடம், நீதியில்தீபம்நேர்நிலையாகிடும், கோதிலா ஞானக்குருவருளாமே. ()

கெவுரி.

குருவாங்கெவுரிகூட்டும்வகைகேள், திருவாம்வெள்ளைசிறந்திடும்வீரமும், உருவானநாகமுவந்திடுந்துள்ளியும், தருவானபச்சையுந்தன்னொடுதாரமே. ௨௱௰௩

தாரமோடொன்றுப்பத்தகர்த்துப்பொடித்திடு, பூரமாஞ்செம்பு அதனிலடக்கியே, சாரமாய்மூடியேசாத்துமண்சீலைதான், காரமாஞ்சட்டியிற்சுடுக வெரித்திடே. ௨௱௰௪

எரித்தபதந்தானெள்ளும்பொரித்திடு, குறித்தபசத்தினிற்குணமாயிறக்கியே, தரித்தமருந்துந்தன்மையாய்க்கட்டியே, பருத்தகெவுரிபாஷாணமாமே. ௨௱௰௫

விரம்.

ஆகுவேவீரத்தடைவுகள்சொல்லுவேன், வாகுடன்வெள்ளைவார்சிலை லிங்கமும், பாகுடன்பச்சையும்பாங்கானகெந்தியும், தாகமாய்வெட்டியுந் தன்னொடுசாரமே ௨௱௰௬

சாரமுங்காரமுந்தன்னொடுதாரமும், ஒரிடைக்கூகமுருநப்பொடித்திடு சேரிடுகாசிநிலத்தநற்குப்பியில், வாரிச்செலுத்திவகையுடன்மண்ணிடே

மண்ணிடுதாழியில்வைத்தெரித்திடு, உன்னிப்புநீ யுறைந்திடுங்கட்டிபோல், வன்னிநிறைந்துவளர்சாமம்நாலினில், கன்னிமைபாகத்தானதை யெடுத்திடே ௨௱௰௮

எடுத்தகுப்பிபதமாய்க்குளிர்ந்தபின்,விடுத்ததைநப்பாரு வெண்மதி யாகிடும்,அடுத்தசாரகருஆதிகுருவிதாம்,படித்தநோர்வீரம் பாஷாணமானதே. உாயகூ

கோழித்தலை சுரைக்காய்க் கெந்தி.

ஆணதோர்கோளிஅதிகநல்செந்தியை,பூணவேசொல்வதைப்புத்தியாய்க்கேளு,தோணவேதாரந்தொடுசிலைபச்சையும்பூணவேதுத்தம்புகழ்வெள்ளிங்கமே. உஉய

லிங்கமும்வீரமும்நேர்சமனாகவும்,சங்கையாவேபொடித்தாத் தானிடுகுப்பியில்,அங்கமதாகஅமர்ந்திடுந்தாழியில்,சங்கையுடனேநாக்கெரித்திடே

எரித்திடுசாமமியல்பாயெரிந்தபின், குறித்தசாக்குக்குணமாக்கட்டுண்ணும், பரிந்திடுங்குப்பியைப்பதமாயுடைத்தெடு, தரித்திடுங்கோழித்தலைக்கெந்தியானதே. உஉஉ

சுரைக்காய்க் கெந்தி.

கெந்திசுரைக்காய்க்கெந்தியைக்கேளு, அந்தந்துருசுஆனதோர்துத்தமும்,வந்திடுநாகமும்வளர்ரசவீரமும், பந்திடுலிங்கமும்பாஷாணமாமே.

தாரமொடுசிலைசத்தியுங்கூட்டியே,வீரமா மொன்றாய்வேண்டிப்பொடித்திடு,சாரமாங்குப்பியில்தானிட்டெரித்திடு,காரமாமொன்றாய்க் கட்டியுருகுமே. உஉச

கட்டியுருக்கனகம்போல்நின்றிடுஞ், சட்டமாய்க்குப்பியைத்தகர்த்தெடுத்திடு,நட்டம்வாராதுநாரணிசந்துகள்,தட்டில்லாச்சுரைக்காய்க்கெந்தியுந்தானே. உஉரு

பவளப்புத்து.

தானும்பவளப்புத்துச்சமர்த்துகேள்,கோனானகெந்தியுங்கொடுஞ்சிலைதாரமும்,பூணுதபச்சையும்புகழ்ரசநாகமும், காணுதவீரமுங்கடுலிங்கசாரமே உஉசா

சாரமோடொன்றாய்ச்சதிராய்ப்பொடித்திடு, காரமாங்காசிக்கருவான குப்பியில்,பாரமாயேற்றிப்பதியாமண்சீலைசெய்,வீரமாய்நதாழியில்விட்டுமணலிடே உஉஎ

மண்ணிட்டடுப்பில்வளமாயெரித்திடு,விண்ணிட்டுப்போனால் வெந்திடுமேனிகள்,கண்ணிட்டுமெவுனக்கருவாயெரித்திடு, தண்ணிட்டுநாலுசாமந்தனலிடே உஉஅ

தணலிட்டெரித்துச்சதிராய்க்குளிர்ந்தபின், மனதுற்றுக்குப்பியைவாகாயுடைத்திடு,புனலொத்துநின்றபுதுமைபவளம்போல், புனரொத்துநிற்றபவளபாஷாணமே உஉகூ

## சிங்கிபாஷாணம்.

பாஷாணமானபதிவாமரிதாரம், ஆசாரமாகஅரூளாரோபின்னங்கேள் கூசாதபச்சைக்குருவானலிங்கமும், பேசாதவெள்ளையும்பெரிதானவீரமே.

வீரமும்நாகமும்மேல்சிலைதாரமும், காரமுஞ்சாரமும் கதித்திடுஞ்சூதமும்; பாரமாயொன்றாய்ப்படியப்பொடிசெய்து, சாரமாங்குப்பியில்தானிட்டுமண்ணிடே. ௨௱௧

மண்ணதுபூசியவளமானதாழியில், நண்ணயமாகநடுவிலிருத்தியே, பண்ணிடுதாழியில்பதிவானமணலிட்டு, எண்ணியேநாலுசாமமெரித்திடே.

எரித்திட்டெடுத்துஇதமாய்க்குளிர்ந்தபின், குறித்திட்டனேகங்குருவைவணங்கிடு, மறித்திட்டகுப்பியைவாகாயடைத்திடு, பரித்திட்டதாரப்பாஷாணசிங்கியே ௨௱௩

## கோடாசூரிபாஷாணம்.

சிங்கிகோடாசூரிபாஷாணஞ்சொல்லுவேன், தங்கியவீரமுந்தன்னொடுநாகமும், பொங்கியபச்சையும்பொதுரசலிங்கமும், அங்கமனோசிலையரிதாரங்கூட்டிடே. ௨௱௪

கூட்டிடுங்கெந்தியுங்குருவானவெள்ளையுந், தாட்டிகமாகச்சதிராய்ப்பொடித்திடு, நாட்டிடுசெப்புக்குப்பிநடுவிலே, போட்டிடுசீலைபொருந்தேழுசெய்திடே ௨௱௫

செய்திடுந்தாழிசிறப்பொடுநடுவினில், வைதிடுங்குப்பியைவாகாய்மணலிட்டு, எய்திட்டடுத்துஇயல்பாயறுசாமம், கொய்திடுஅனலைக்குறுகளித்திடே ௨௱௬

எரித்திடுந்தாழியியல்பாய்க்குளிர்ந்தபின், விரித்திடுகுப்பியைவேண்டியெடுத்திடு, குறித்தகோடாசூரிகுணமாய்ச்சிவந்துதான், தரித்ததோர்வேதைக்குந்தானவனாகுமே. ௨௱௭

## பஞ்சபட்சிசரக்கு.

தானவனானதரும்பஞ்சபட்சியை, கோனவன்தன்னால் குறிப்புடன்சொல்லுவேன், ஆனபூரசமும்அப்பினில்ரசமும், வானவர்போற்றுமகாரசங்கூட்டிடே ௨௱௮

கூட்டியரசமுங்குருபச்சைவெள்ளையும், தாட்டிகமான தன்னாவாய்மனோசிலை, நாட்டியவீரம்நலமானலிங்கமும், மாட்டியொன்றாய்மடியப்பொடித்திடே ௨௱௯

பொடித்திடுமருந்தைப்போட்டிடுகுப்பியில், தொடுத்திடுசீலைசுருக்காயேழுசெய், விடுத்திடுதாழியில்வேண்டியமணலிட்டு, கொடுத்திடுதீத்தான்குறுக்காறுசாமமே ௨௱௰

சாமமேழெத்தந்தணலாறினின்றபின், ஆமெனக்குப்பியைப்பவுடையாயுடைத்திடு, காமெனநின்றகடுப்பஞ்சபட்சிதான், சாமமீனவென்றகடுந்தீயுமானதே ௨௪௧

Vide 434.35. குங்குமப்பாஷாணம் [illegible] my note book

நீயானகுங்குமப்பாஷாணஞ்சொல்லுவேன், மாயானசெந்தியுமனோசிலைகாரமும், தாயானபச்சைத்தருலிங்கவீரமும், காயாதவெள்ளைகடுத்தத்தஞ்சாரமே ௨௪௨

சாரமாம்நாகம்தனிற்கருவங்கமும், பாரமாய்க்கூட்டிப்படியப்பொடித்திடு, காரமாம்நீரிற்கடுகப்பிசறியே, வாரமாங்குப்பியில்வாரியடைத்திடே

அடைத்திடுகுப்பிக்குஞ்சுமன்சீலைசெய், உடைத்திடாத்தாழியிலூன்றிமணலிடு, கடத்தினிலக்கினிகாரணமாக, திடப்படஅஞ்சுசாமமெரித்திடே ௨௪௪

எரித்திடுதாழியியல்பாய்க்குளிர்ந்தபின், குறித்திடுகுப்பியைக்குணமாயுடைத்திடு, சரித்திடுமஞ்சள்தன்னிறம்போலவே, பரித்திடுக்குங்குமப்பாஷாணமானதே ௨௪௫

ரத்தபாஷாணம்.

ஆனதோர்ரத்தபாஷாணவாண்மைகேள், பேணுமனோசிலைபெரிதாணசிங்கியும், வானவர்சூதம்வளர்வீரநாகமும், காணவேலிங்கங்கடிதானசெந்தியே. ௨௪௬

செந்தகம்பச்சைகெம்பீரவெள்ளையும், பந்தமதாகப்படியப்பொடித்திடு அந்தமயத்தினரிதானகுப்பியில், சொந்தமாயிட்டுச்சுற்றேழுசீலையே ௨௪௭

சீலைமண்செய்துசிறப்பாகத்தாழியில், ஆலயமாகவமர்த்திடுமணலிடு, வாலையைப்போற்றிவைத்திடுசூளையில், கோளைகள்நீங்கிக குணமாயுருகுமே ௨௪௮

உருகித்திரண்டுவுரிமையாய்க்கட்டுண்ணும், தருகிமறுநாள்தானெடுத்திடு, மருவிக்குப்பியைவளமாயுடைத்திட, சருகியரத்தபாஷாணசத்தியே ௨௪௯

கோமுகப்பாஷாணம்.

சத்தானகோமுகத்தன்மைதனைக்கேளு, வித்தானவீரம்விளங்குமனோசிலை, முத்தானவெள்ளைமுழுநீலந்தாரமுஞ், சத்தானலிங்கஞ்சூதமுநாகமே ௨௫௰

நாகமுஞ்செந்தியுஞ்சமாகக்கூட்டியே, பாகமாயொன்றைப்பதியப்பொடித்திடு, ஆகமாச்செப்புஅகலிலடக்கியே, தாகமாந்தாழியில்தனித்துமணலிடே. ௨௫௧

மண்ணிட்டுத்தாழியைவளமாயடுப்பினில், கண்ணிட்டுப்பார்த்துக்க டுகவெரித்திடு, விண்ணெறுத்துநின்றவேதனைப்போற்றியே, பண்ணுதிறக்கி ப்பதிவாயெடுத்திடே உருஉ

எடுத்திடுசெப்பையிதமாயுடைத்திடு, கடுத்தசாரக்குக்கணமாயுருகி யே, கொடுத்தகோர்கட்டியாய்த்தோன்றவிருந்திடும், படுத்தகோமுகப்பா ஷாணப்பண்பிதே உருஙு

## துருசுப் பாஷாணம்.

பண்பாந்துருசுப்பாஷாணஞ்சொல்லுவேன், நண்பானலிங்கம்நாகம்ர சமுடன், வெண்பாநச்சையும்வெள்ளையுந்தாரமும், நண்பான்வீரமுங்கல் லுகெவுரியே உருசு

கெவுரியோடொன்றாய்க்கெணிதமாய்க்கூட்டியே, சவுரியமாகத்தகர் த்துப்பொடிசெய்து, கவுரியசெப்புக்கலசந்தனிலிடு, பவுரியபாண்டத்தில் பதித்துமணலிடே. உருரு

மணலிட்டுச்செம்மிமதியைத்தொழுதுபின், கனலிட்டடுப்பிற்கதிக்க வெரித்திடு, தணலிட்டுநாலுசாமமெரிந்தபின், அனலிட்டிறக்கியாக்கியெரி த்திடே. உருசு

எடுத்தகலசமியல்பாயுடைத்திட, கொடுத்தமருந்துதுருவமாய்க்கட் டியே, அடுத்ததுருசுமதிநிறமாகிடும், படுத்ததுருசுப்பச்சைப்பாஷாணமே

## தாத்தபாஷாணம்.

பச்சையாந்தாத்தப்பாஷாணச்செய்கைகேள், இச்சைதுருசுஇந்திரச ங்கெந்தகம், கொச்சைமனோசிலைகூர்வெள்ளைதாரமும், நிச்சயவீரம்நேரான லிங்கமே உருஅ

லிங்கமுடன்தாத்தம்நேராய்ப்பொடிசெய்து, அங்கமாய்நாகமரிதான குப்பியில், சங்கையுடனேசமர்த்தாய்ப்பொடித்திட்டு, தங்கநற்குப்பிக்குச் சமர்த்தாய்ச்செம்மணலிடே. உருகூ

செம்மணலிட்டுச்சேருள்ளகுப்பியைச், தன்மயச்செப்புத்தாழிதனி லிடு, நன்மைபதாயனலன்றுமெரித்திடு, உண்மைநாலுசாமமுகந்தளித்தி டே உகூ0

எரிந்தபதந்தானெள்நெல்பொரிந்திடும், தெரிந்துஇறக்கிச்சீராய்க்கு ளிர்ந்தபின், அறிந்துநல்குப்பியையன்பாயெடுத்திடு, மருந்துடன்குப்பியும் வாகாயொன்றாகுமே உகூக

ஒன்றாகக்கூட்டியுருநத்திரண்டிடும், நன்றாகநீயும்நயமாயெடுத்திடு குன்றாதசத்துக்குருவிதுமக்களே, பன்றுனதாத்தப்பாஷாணவித்தையே.



Vide 467-458 ரசிதபாஷாணம்.

சித்தர்ரசிதபாஷாணஞ்சொல்லுவேன், சுத்தானவெள்ளைதுலங்குங்கமுடன்,பத்தானவீரமும்பாஷாணதாரமும்,முத்தாமனோசிலைமுழுநீலப்பச்சையே ௨௬௩

பச்சையும்பாகமும்பதிவானகாரமும், இச்சையாகக்கூட்டி யிசையப்பொடித்திடு,நிச்சயமாகநேர்வெள்ளிக்குப்பியில்உச்சிதமாகவூட்டியடைத்திடே. ௨௬௪

அடைத்திடுகுப்பிஅயமானபாண்டத்தில்,திடத்துடன்வைத்துச்செம்பிமண்ணிடு,படைத்திடுஞ்சத்தியைப்பண்பாகப்பூசித்து,கடத்தினிலக்கினிக்கருவாயெரித்திடே. ௨௬௫

எரித்திடுஞ்சாமம்ஈராறுகூட்டியே,தரித்தஅனல்போல் துலங்கவெரித்திடு,குறித்தசரக்குங்குப்பியுங்கூட்டியே,தரித்தமெழுகுபோல்தானேயுருகுமே. ௨௬௬

உருகிநின்றொடுங்கியிருந்திடும், தருகியேபாண்டந்தானேகுளிர்ந்தபின்,மருந்பிராமேதமனதாயெடுத்திடு, பரிதிரசிதப்பாஷாணசிங்கியே. ( )

Vide 429-... சூதபாஷாணம். Bogar 700 Note book

சிங்கியாஞ்சூதபாஷாணஞ்சொல்லுவேன், தங்கியசூதமுந்தாரமும்வீரமும்,பொங்கியகெந்தியும்பொற்சிலைபச்சையும்,லிங்கமும்வெள்ளையும்நேரானகாரமே ௨௬௮

காரமோடொன்றாய்க்கதிக்கப்பொடிசெய்து,சீர்காரவங்கச்சிமிழிலடைத்திடே,நேரேமஞ்சட்டியில்நிறுத்துமண்ணிட்டுக்,கூர்பெறுநாதனைக்குறித்தடுப்பேற்றிடே. ௨௬௯

ஏற்றியேதீபமீராறுசாமந்தான்,காத்திருந்தெரித்திடு கடுங்கனல்தாவவே,சேர்த்தமருந்தாஞ்சிமிழில் முறுகிடும், வாத்தியிறக்கிவரிசையாய்ப்பார்த்திடே ௨௭௰

பார்த்திடும்போதுபடிகம்போல்கட்டியே,நேர்த்தியதாகநிலைக்குமருந்தது, போற்றியேபாருபுதுமைகள்கண்டிடுஞ், சாற்றியசூதபாஷாணஞ்சித்தியே ௨௭௧

கெந்திப்பாஷாணம்.

சித்தியாங்கெந்திப்பாஷாணத்தன்மைகேள், முத்தியும்வெள்ளையும்முதுவீரபச்சையும்,சத்தியமனோசிலைசிவதுத்தநாகமும், பத்தியகெந்தமும்பரமானலிங்கமே ௨௭௨

லிங்கம்ரசமுடனேசரிகூட்டியே,அங்கமதாகஅமர்த்திப்பொடித்திடு சங்கையுடனேதாம்பிரக்குப்பியில், உங்கக்கொடுத்துஉறுதிமண்சீலையே. ( )

சீலைவலுவாய்ச்சுமத்துமண்தாழியில், ஆலயமாகஅமர்த்திமண்ணிடு, வாலைப்பேற்றிவைத்துநல்தீயெரி,துளமுருகித்துவளஇறுகுமே. ( )

